29th September 1961]

வர்கள் போட்டிக்காக கொஞ்சம் விலையைக்குறைத்து, அந்தத் துணியை அங்கே ஏற்றுமதி செய்ய முயற்சி எடுத்தார்கள். ஆனால், இந்தத் துணி அங்கே போனவுடனே, துணி மீதிருந்த மோகமே குறைந்துவிட்டது. காரணம், தரம் ரொம்பக் கம்மியாக இருந்தது. அதனால் இந்த நெசவு பாதிக்கப்பட்டது.

*Handloom (payment of rebate)*

* 1909 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have received any amount from the Centre for payment towards arrears of rebates to be paid to the handloom weavers?

The Hon. Sri V. RAMAIAH : Yes, Sir.

Sri N. K. PALANISAMI : ஸெஸ் பண்ட்டிலிருந்து நம் மாநிலத்திற்கு எவ்வளவு தொகை கிடைக்கிறது ? அதிலிருந்து ரிபேட் எவ்வளவு கொடுக்கப்படுகிறது ?

The Hon. Sri V. RAMAIAH : ரிபேட் கொடுப்பதற்கு, மத்திய அரசாங்கத்திலிருந்து நமக்கு இரண்டு தவணைகளாகப் பணம் வந்தது. முதல் தவணையில் 7.24 லட்ச ரூபாயும், இரண்டாவது தவணையில் 107.95 லட்ச ரூபாயும் வந்தது.

Sri A. R. SUBBIAH MUDALIYAR : ரிபேட் கொடுப்பதிலே ஒழுங்கீனம் இருப்பதாகக் கண்டு, அனேக பரிசீலனை செய்யப்பட்டு, ஒவ்வொரு சொஸைட்டிக்கும் பெய்டு செக்ரடரி போட வேண்டுமென்ற ஒரு திட்டம் இருக்கிறதே, அது எந்த நிலைமையில் இருக்கிறது ?

The Hon Sri V. RAMAIAH : ரிபேட் கொடுப்பதிலே ஒழுங்கீனம் கிடையாது. ஆனால், சில சொஸைட்டிகள் தவறான புள்ளிவிவரங்கள் கணக்குகள் கொடுத்து அதிகமாக ரிபேட் வாங்க முயற்சி எடுத்தார்கள். அது போன்று தவறாக நடந்துகொண்ட சொஸைட்டிகளுக்கு உடனே கொடுக்காமல், அவைகளினுடைய கணக்குகள் பூராவையும் பரிசீலனை செய்து ரிபேட் கொடுப்பது என்று முடிவு எடுத்தார்கள்.

Sri K. B. S. MANI : ரிபேட் கொடுப்பது என்பது, பிச்சை போடுகிற மாதிரி, பரம்பரைப் பழக்கமாக வந்துவிடுகிறது. அவர்களுக்கு நிரந்தரமான உதவி அளித்து, மற்றவர்கள் தயவை எதிர்பார்க்காமல் அவர்களே கொஞ்சங்கொஞ்சமாக முன்னேறி வர அரசாங்கம் வழி வகுக்குமா ?

The Hon. Sri V. RAMAIAH : இதிலே பிச்சை போடுவது எப்படி வருகிறது என்று எனக்கே தெரியவில்லை. பிச்சை இதிலே யாருக்கும் கொடுக்கவில்லை. அந்தத் தொழில் நசித்துவிடாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தைச் சேர்ந்தது. ஏனென்றால், அதிலே ஏராளமான தொழிலாளர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். அதனால், அதற்கு வேண்டிய உதவியை எப்போதுமே அரசாங்கம் கொடுக்கத் தயங்காது என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

Sri K. VINAYAKAM : In the matter of clearance of the rebate due to the societies, are the Government aware of the fact that the societies in the Tiruttani taluk which came over from Andhra Pradesh to the Madras State have not yet received the rebate amount which is in heavy arrears for about 2 years. That is even before the merger of that taluk with Madras, they were not paid the amount. Now, even after the lapse of $1\frac{1}{2}$ years since the

merger took place, the arrears have not yet been cleared. Will the Government look into the matter and hasten the payment of the rebate amount to those societies without further delay?

THE HON. SRI V. RAMAIAH : If they have not been paid the rebate amount till now, naturally it means that there must be some difficulties. All those difficulties must be enquired and looked into. If there has been any undue delay and if the hon. Member feels that speedy action has to be taken into the matter, he may write to me separately and I will get the matter examined.

SRI S. M. ANNAMALAI : மத்திய சர்க்கார் கொடுக்கக்கூடிய ரிபேட் தொகை ஆண்டுக்கு ஆண்டு குறைந்துகொண்டு வருவது உண்மையா ? இதைச் சில வருடங்களில் நிறுத்திவிட வேண்டுமென்று மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கத்திற்கு வற்புறுத்தி வருகிறார்களா ? அப்படியானால், மாநில சர்க்கார் அதன் மீது என்ன கருத்து கொண்டிருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : அதற்கெல்லாம் தனிக் கேள்வி போடலாம்.

SRI M. P. SUBRAMANIAM : Co-operative fold-க்கு வெளியேயுள்ள கைத்தறி நெசவாளர்கள்தான் மிகுதியாக இருக்கிறார்கள் என்ற கணக்கு இருக்கிறது. அவர்களை முன்னேற்ற அரசாங்கம் எந்தவிதமான திட்டங்கள் அவர்களுக்காக வகுத்திருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்கும் தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI M. R. KANDASAMI MUDALIAR : இந்த ரிபேட் கொடுக்கக்கூடியதிலே சிறிது நாற்பட்டைக் கலந்தால்கூட கொடுக்க மறுக்கிறார்கள். இதனால் நல்ல ரகத் துணியை உற்பத்தி செய்ய முடியாமல் கைத்தறியாளர்கள் திண்டாடுகிறார்கள். இதைக் கவனித்து தக்க வகையில் திருத்துவதற்கு யோசிப்பார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : Sir, the hon. Member is making a suggestion.

SRI A. R. SUBBIAH MUDALIAR ; ரிபேட் வாங்குவதற்காக சொஸைடிகள் கொடுக்கிற கணக்கு சில இடங்களில் ஒழுங்கீனமாக இருந்தது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இதைச் சரி செய்ய சொஸைடிகளுக்கு ஒரு பெய்ட் செக்ரடரி போடும் திட்டம் இருந்ததே, அது எந்த நிலையில் உள்ளது ? கைவிடப்பட்டுவிட்டதா ?

THE HON. SRI V. RAMAIAH : அது பற்றி தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI N. K. PALANISAMI : சர்க்கார் கதருக்கு மட்டும் கொடுக்கிற ரிபேட் நான்கணா வரையில் போகிறது. அதே சமயத்தில் கைத்தறிக்குப் படிப்படியாகக் குறைந்து வரக் காரணம் என்ன ?

THE HON. SRI V. RAMAIAH : நான் சொன்ன தகவலில் இருந்து பார்த்தால் தெரியும். அப்படி ஒன்றும் படிப்படியாகக் குறையவில்லை.

*Handlooms*

* 1910 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of handlooms in each district of our State;